12th December 1961]

**SRI N. K. PALANISAMI**: ஸார், மேஜையின் மேல் வைத்திருக் கக் கூடிய லிஸ்டில் கோடம்பாக்கம் பாலம் கட்டுவது பற்றி ஒன்றும் காணேம். வெகு நாளாக சென்னை நகரம் பூராவிலும் இதைக் கட்டவேண்டுமென்ற கிளர்ச்சி இருப்பது கனம் மந்திரி அவர்களுக் குத் தெரியும். அப்படி இருக்கும்போது இது சேர்க்கப்படாமல் இருப்பதற்கு என்ன காரணம்? மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத் தில் எந்தெந்த பாலங்கள் கட்டப்படும்?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM**: கோடம்பாக்கம் பாலம் அவசரமும் அவசியமும் வாய்ந்த ஒரு பாலம் தான். வேண்டிய நிதி கிடைக்காததால் தாமதப்பட்டு வருகிறது. ஆனல் ஸ்டேட் ஹவுஸிங் போர்டு தங்களிடம் இதைக் கட்டுவது ஒப்படைக்கப்பட்டால் பாதிச் செலவை ஏற்றுக்கொள்வதாகச் சொல்லியிருக்கிருர்கள். இதைக் கட்டுவதற்கு நகரசபை மூன் றில் ஒரு பங்கு கொடுக்கவேண்டும், சர்க்கார் மூன்றில் ஒரு பங்கு கொடுக்கும். இதெல்லாம் இப்போது பரிசீலனையில் இருக்கிறது. ஹவுஸிங் போர்டு பாதிச் செலவை ஏற்றுக்கொள்வதாகச் சொல்லி யிருப்பதால் இது சீக்கிரம் எடுத்துக்கொள்ளப்படும் என்று நினைக் கிறேன். திருவொற்றியூரில் பாலம் கட்டப்பட்டு வருகிறது. இப் போது ஹைக்கோர்ட்டுக்கு அருகில் ஓவர் பிரிட்ஜ் கட்டுவதாக இருந்தது மாறி இப்போது ஒரு ஸப்-வே கட்டப்படும்.

* 2246 *Q.*—SRI A. A. RASHEED: Will the Hon. the Minister for Home be pleased to state the reason for the delay in the construction of an overbridge near the High Court in Madras City

**THE HON. SRI M. BHAKTAVATSALAM**: The Government had under consideration for some time past the question whether an over-bridge or a sub-way might be constructed in lieu of the level crossing at the Light House Road. After a series of conferences, it was finally decided recently that a sub-way might be constructed. The detailed plans and estimates in respect of the scheme are being finalised.

**SRI N. MARUDACHALAM**: கோவை நகரில் ரெயில்வே ஓவர் பிரிட்ஜ் கட்டுவதைப் பற்றி கோவை நகரசபை சர்க்காருக்கு தாக்கீது செய்திருக்கிறதா? அதன் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது? மத்திய சர்க்காரிலிருந்து அதற்கு எவ்வளவு தொகை நமக்குக் கிடைக்கும்?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM**: நாஷனல் ஹைவே ஸாக இருந்தால் தான் மத்திய சர்க்காருடைய பரிபூர்ண உதவி கிடைக்கும். மற்றப்படி கடன் தான் கொடுப்பார்கள். இதில் நகர சபையாரும் ஒரு பங்குச் செலவை ஏற்றுக்கொள்ளவேண்டும். அவர்களுடைய நிதி நிலைமை அனுமதிக்கவில்லையென்ருல் தாமதம் ஆகின்றது.

[12th December 1961

**Sri N. K. PALANISAMI :** May I know whether any grant has been promised by the Centre for the construction of overbridges and highways in this State?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** I have just now stated that if they are National Highways, the Government of India undertake the entire cost of the construction but if they are other roads, we can only get loan from the Government of India.

**Sri M. K. SOMASUNDARAM :** திருநெல்வேலி ஜங்ஷனில் மேம்பாலம் கட்டவேண்டுமென்று பல முறை இந்த சட்ட சபையில் வற்புறுத்தப்பட்டுள்ளது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இந்தத் திட்டம் எடுத்துக்கொள்ளப்படுமா? ப்ரையாரிட்டி கொடுக்கப்படாமல் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நடைபெற முடியுமா என்று அறிய விரும்புகிறேன்?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** நான் முன்பு தெரிவித்தது போல பெரிய பட்டியல் தயாரித்திருக்கிறோம். எல்லாவற்றையும் எடுத்துக்கொள்ள நிதி நிலைமை இடம் கொடுக்கவில்லை. அதனால் ஒன்றிரண்டு தான் எடுத்துக்கொள்ளப்பட்டு வருகின்றது.

**Sri K. VINAYAKAM :** The Corporation, with its slender finances is incapable of constructing an overbridge at the Kodambakkam railway station and whereas the State Housing Board has come forward to donate 50 per cent of the cost, would the Government pursue this matter and give the amount that is necessary instead of leaving this matter at this end?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** I have already stated that because the State Housing Board has come forward with an offer of 50 per cent of the cost of the construction of the overbridge, there should not be any further delay in the matter.

**Sri S. M. ANNAMALAI :** ஸார், நேஷனல் ஹைவேஸ் பாதைகளிலுள்ள பிரிட்ஜ்களைக் கட்டுவதற்கு மத்திய சர்க்கார் பொறுப் பேற்றுக் கொள்வதாக கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அப்படியானால், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே ஒரு பிரிட்ஜ்கூட கட்டவில்லை என்பது உண்மையா? இப்போது 16 பிரிட்ஜ் கட்டப்போவதாகச் சொல்லப்படுகிறதே, இதிலே மத்திய சர்க்கார் கட்டுவதாக ஏற்றுக் கொண்டது எவ்வளவு என்பதைச் சொல்ல முடியுமா?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** இதைப்பற்றி என்னிடம் தகவல் இல்லை. மத்திய சர்க்கார் கட்டுவதாக இருந்தாலும், அதற்கும் நிதி நிலைமை இடம் கொடுக்க வேண்டும். இப்போது நாடு பூராவும் ஏராளமான ஓவர் பிரட்ஜ்கள் கட்ட வேண்டியிருக்கிறது. அப்போதைக்கப்போது அந்தந்த ஆண்டிலே உள்ள நிதி நிலைமைக்குத் தக்கவாறு இந்த பிரிட்ஜ்களை எடுத்துக் கொள்கிறார்கள்.